வேறு.

பிளவுபட்டும் பெருடல்சொண்டினில்
வளமைசூரியன் மற்றும்வியக்குசன்
இளவதேய்பிறை யெட்டிலுறச்சனி
களவதாய்ப்பிறை தன்னையேகண்டிடில். (௧௬௮)

கண்டதேய்பிறை சூரியன்காரிசேய்
மண்டிநால்வரு நாலெட்டில்வந்துறப்
பண்டுசெல்லவர் பாராதிடிநகைசால்
துண்டமாகிற் றுயரின்மடிந்திடும். (௧௬௯)

மடிந்ததேய்பிறை வந்துசன்மத்துறப்
படிந்தவெட்டினிற் பானுகுசன்சனி
தொடர்ந்துமூவருங் கூடியுறத்துரை
கடிந்துவாளுற் சண்டதுண்டஞ்செய்வன். (௧௭0)

---

# இலங்கைராசிமானசங்கை.

விழச்சாயை, ராபிண்டத்துருவம்.

வேறு.

மீனமேடங்கன்னிதுலாம் விரும்புமிருநூற்றெழுபதுடன்
ஆனவெட்டேவிடைசிங்கமாகுங் குடந்தேண்மூந்நூறில்
ஈனமொன்றுநண்டுதனுவெழில்சேர் மிதுனமகரமிவைக்
கானமுந்நூற்றிருபான்மூன்றுகு மிலங்கைவிநாடியென்ப. (௧௭௧)

என்னுந்தேசவிழுச்சாயை யியன்றமதுரைக்கொருநூறும்
மன்னுமையேழாங்காஞ்சிக்கறைவர் நூறேடைம்பானேழ்
பன்னுஞ்சோழநாட்டிற்கே பகர்வாய்நூற்றுநாற்பானுன்
தென்னபெங்களூர்தனக்கே யிருநூற்றொருபதெனச்செப்பே. ()

வேறு.

செப்பியதோர் சரபிண்ட முதலிருபா னாகும் திகழிரண்டோ
பதினாறுஞ் செறிமூன்றி னாகநோ, ஒப்புறமா றேடனையே வீச
மாகும் உயர்தருவ யிவைமூன்றை விமுச்சாயை தன்றால், தப்பாமற்
றனித்தனியே பெருகவெருந் தொகையைச சார்மேடம் விடை மிது
னஞ் சன்னின்முறை யாக, இப்புவியோர் புகழிலயகை ராசிதனிற்
கலைய இயதேச ராசியன வாகுமென லாமே. (௧௫௩)

வேறு.

ஆனபெண்ணு மரியுடனண்டிறும
வானகோலுந் தேனுஞ்சறுவும்முறை
ஆனவாறுடன் கூட்டிமீன்குடம்
மானுந்சொன்ன முறைப்படிவாங்கிடே. (௧௫௪)

---

## சீவனம்.

வேறு.

அம்புவியோர் செய்தொழிலாற் சீவனமுண் டாகும் அவையறி
லக் கினஞ்சோம னாதவன்மும் மனைக்கும், தம்பமொடு பத்தாம்வீட்
டங்கிசையி லிருந்தோர் தம்மிலறி கப்பலமாய்த் தரித்தவரங் கிசை
தான், வெம்புரவித் தேரோனங் கிசத்தனையன் பலமே மேவில்புல்
வைக்கோலும் விற்றுணவே கொள்வன், செம்பொன்விற் பதுராசிப்
பலனாலுக் கோரை திக்குபல முண்டாயிற் செய்வன்வயித் தியங்கள்.

களங்கயில்லா வெண்டிங்க ளங்கிசமே யாகிக் கமழுமிலக் கினத்
திரையைக் காணமுத லாகில், விளங்கியநற் பயிர்த்தொழிலே புரிந்
துணவு கொள்வன் மேவியரெண் டாந்திரையைக் காணமே யாயின்,
வளங்கெழுசிந் துவிற் சம்பான் கப்பல்சோங் கோட்டி வாழ்வன்மூன்

ருந்திரையைக் காணமுமே யாயின், இளம்பிடியோ திமந்தனேயும் பழிதகநடை மடவார் இணக்கத்தாற் சீவனமுண் டென்பரினி யோரே. (கூ௫௬)

இனியசெவ்வா யங்கிசத்தி லக்கினமே பலமாய் இரும்புவெள்ளி செம்பொனும்விற் றிருப்பனவாங் கிசைதான், னனியபல மாயிடிலக் கினியிலுறு தொழிலே நடத்திடுவன் றிரிங்கிசாங் கிசம்பலமே யாயின், தனியுறுமா யுதம்பிடித்துச சேவிப்ப னேழாம் தானமது பலனுயிற் றக்கதொழில் செய்வன் கனிமொழியா யிரவிமுதல் சனி மட்டு மெண்ணிக் கண்டதுசத் தாங்கிசமே ழாம்பலன்கண்டீரே. ()

கண்டபுத னங்கிசத்தின் பலனவாங் கிசையே காவியங்கற் பன் றுவாத சாங்கிசமே யாயின், பிண்டுசிற்ப சாஸ்திரமே யறிந்துணவு கொள்வன் மேயுந்திரி சாங்கிசமே யெழுதுந்தொழி லான், கொண் டவறு பதிலோரை யங்கிசமேற் கணிதம் குறித்திடுவன் புதனிருந்த ராசிதனைப் பிரித்து, மண்மயறு பதுபங்கு செய்யிலொற்றைப் பங் கில் வந்துபுத னிருக்கிலெனை வேவழுத்தல் வேண்டும். (கூ௫அ)

வேண்டுகுரு வங்கிசத்தின் முதற்றிரையக் காணம் விப்பிராற் பலனிரண்டாந் திரையககா ணந்தான், பூண்டதே வதைகளினுற் பலன்மூன்று காணம் புண்ணியத்தாற் பயனுகுஞ் சுக்கிரனங்கிசை க்குத், தாண்டுசுர பிகளொருமை யெறுமூன்றுங் காணம் தக்கவெள்ளி விற்பனடுத் திரையக்கா ணந்தான், மீண்டுமுதற் றிரையக்கா ணம்ம துவே யாயின் விரவுநவ ரததினமே வியாபாரஞ் செய்வன். (கூ௫௯)

செய்யசனி யங்கிசத்திற் பலன்சிறுவன் றனுஞ் செப்பியமித் திராங்கிசமேற் பிரயாசத் தொழிலாம், வெய்யபா வககிரகம் லக்கின த்தைப் பார்க்கில் மெத்தவே சுமைசுமந்து மெய்க்குணவு கொள்வன், ஐயவிலக் கினந்தன்னை நீசருங்கண் டக்கால் ஆகாத காரியங்க ளவத்

தொழிலே செய்வன், தூய்யசனி யங்கிசத்திற் சுபக்கிரகங் கூடில்
துலங்கிடவே தான்சிறப்பத் தொழில்செய்து வாழ்வன். (௯௫0)

வேறு.

ஆதவன் சசிசேக் கினைபிவை மூனறக் சதிபரி லதிகமாம் பலத்
தோடை - அடைந்தவந் தெசந்தான் பரிதியடை கிசமா யம்பொன்னும்
வைக்கனும் விற்று, நீரோய் வயித்தியங்களுஞ் செய்வன் நீள்பிறை
பாகிசை மாயின் - நீரினிற் போக்கு நடத்திமே புய்வன் நிலமகனங்
கிசை யாயின், அதமக் கிரியா விரும்புபொன் வெள்ளி யுருக்கலா
யுதங்களி னைவம் - உணவுகொண் டுவெண புர்தியங் கிசபோ லுரைத்
திடு கணிதமுறு கணக்கும், தீரமுற்பத் தொழில்கள்கா வியத்தாற்
சீவனம் வேந்தனா கிசைகுத் - செய்வமா மறைமேயார் பெரியவ
ராலுஞ் சீவனம் புரிந்திணி திருப்பான. (௯௯௧)

வேறு.

இருந்தசுக்கிர னயகிசமேறிலோ
தெரிசுதரத்தினம் வெள்ளியாற்சீவனம்
பொருந்தகன்னங் கொம்புகவீனமாய்
வருந்திடுந்தொழிற் செய்வன்வளமிலான். (௯௯௨)

---

## கேந்திரபலன்.

வேறு.

திக்குப்பலமாவது சேய்கதிர்பத்தில்
தொக்கக்குருபுந்தி யிலக்கினத்துற்றல்
துக்கச்சனியேழினிற் சூழ்ந்திடின்வல்லன்
சுக்கிரன்சசிநான்கினில் வலியெனச்சொல்லே. (௯௯௩)

## வேறு.

பத்தாகு மதிபதியை யிரவிசசி பார்க்கப் பரிந்திவர்மூ வருங்கூ டப் பத்தாம்வீட் டதிபன், மெத்திரவி சசிவீட்டி லானுலு மிருக்க வெற்றிமுடி யாசர்பக்கன் மேவியவர் தம்மைப், புத்தியுட னேசேர் ந்து சீவனமே செய்வன் புகழ்பத்தா மதிபன்பூ புத்திரனைக் கூடில், சித்தமாய்ச் சேனுதி பதிகடமைச் சேர்ந்தே சீவனம்பண் ணுவனென் றே தெரிந்துரைசெய் வாரே. (ககச)

செய்யபத்தா திபன்புதனைச் சேர்ந்துமே நிற்கில் ஸ்திரீகளினுற் புத்திரியாற் றெரிகணிதத் தாலும், துய்யகுரு வுடன்கூடிற் புராண சாத் திரத்தால் சுருதியா லமைச்சரா ரியர்துரைக டம்மால், வைய மெலாம் புகழ்பாக்கி யத்தொடுசீ விப்பன் மகிழுஞ்சுக் கிரனுடனே வந்துமிகக் கூடில், பையமறை யோரமைச்சர் பரிகரியா வெருமை படைத்துமிரத் தினக்கிரயம் பண்ணியுஞ்சீ விப்பன். (ககரு)

சீவிதமார் சனியும்பத் தாதிபனுங் கூடில் சிலம்பங்கள் படிப்பி த்துந் திருடியுமே திரிந்து, பாவங்கட மையொருவர் தமக்குப்போ தித்தும் படர்வனத்தி லிங்கிசைகள் பண்ணிமரம் வெட்டிப், பூவுல கிற் சீவிப்பன் பத்தாதி செவ்வாய் பொருபாம்பு மூவர்களுமே பொரு ந்தி நிற்கில், தாவுகளில் விஷப்பிரயோ கங்களையே செய்துந் தரணி யிலே திருடியுமே சீவிப்பன் றனே. (ககசு)

தானமா மைந்தாகு மதிபதிபா வியுமாய்த் தக்கவா ளெயிற்றர வக் தன்னையுமே கூடி, ஈனமிலா திருமூன்றி லேயிருக்தக் காலும் எண்ணியமூன் றுமதிபன் பாவியுமே யாகி, ஊனமுறும்பாம்புடனே கூடியெங்கே யேனும் உற்றாலு மவன்மனையா ளுடனேமற் றோரை, மானமறக் கூட்டியவன் கைப்பொருளை வாங்கி வயிறுவளர்ப் பானெ னவே வழுத்துவர்மா தவரே. (ககஎ)

வழுத்தியசுக் கிரன்செவ்வாய் சனிபுந்தி யரசன் மருவவீனத் தொழிலால் வயிறுவளர்த் திடுவன், செழித்தபிறை சனிவெள்ளி செவ்வாய்புந் தியுமே செறியுமரம் வெட்டிவிற்றே சீவனமே செய் வன், இழுத்தமுடவன்வெள்ளி குருசெவ்வாய் கூடில் ஏழைதுக்க முளன்கணக் கெழுதியுஞ்சீ விப்பன், பழித்தசனி குருவெள்ளி பத ங்கன்செவ் வாயும் பரிந்துறின்மந் திரவித்தை பண்ணியினி திருப்பன். (௯௬அ)

இருந்ததன லாபபாக் கியாதிகுச ஞனல் இயல்சேவ காவிருத்தி யினியவர்க்குச் செய்வான், சொரிந்தபுத ஞயின்வித்தை வாகனங்க ளுண்டு சொல்லரிய குருவாயின் சகலபாக் கியவான், அருந்தவஞ் சேர் பிருகாயின் புவிலாப மேவும் அரவுசனி யாயிற்சோ ரங்களினே தியினல், வருந்துமீ னத்தொழிலே புரிந்துசீ விப்பன் மதிவதனத் திலதநுதல் வளர்வஞ்சி யாரே. (௯௬௯)

## வேறு.

வஞ்சியேசனி செவ்வாய்மதிமகன்
செஞ்சொல்சுக்கிரன் றேவர்கடன்குரு
அஞ்சுபேருமொன்ருக வமர்ந்திடில்
துஞ்சுமீனத்தொழில் செய்துவாழ்வனே. (௯௭௦)

## வேறு.

கண்டசன்மங்கேந்திரத்திற் காணுமைந்தெட்டொன்பதனில்
பண்டேசோமன்புகரிருக்கப் பாரிதனக்குமறுபுருடன்
கொண்டேவிடுத்துச்சீவனமாய்க் கொள்வன்கூறும்புவியோர்க்குக்
கெண்டைவிழியின்பார்வையினுற் கிட்டியணையுந்தனத்தாளே. ()

## துர்ப்பிட்சகாலம்.

### வேறு.

மந்தனு மிருபாம் பரசனிந் நால்வர் மாறியே கூடிடில் விளையும - மறைபயி றற்ப மிவரிரு வர்க்கு மற்றொரு பத்தினி லொருவர், இந்தவா றிருக்கின் வெட்டைகா லமதா மிடபந்தேள் கோல்சிங்க மீனம் - இவரியகும் பத்தி லிருக்கிலிப் புவியி லிறைபுதன் மனுஷரு மடிவர், அந்தவீ டாறின் முன்சொன்ன நால்வ ராதித்தன் குசனொடுங் கூடி - அமரவே குடிக ளிருந்தவூ ரெங்கு மல்கைநாய் நரிகுடி கொள்ளும், தநதிரஞ் சுருதி மொழிப்படி புரியுந் தக்கதோர் வேள்விக ளொல்லாம் - தான்மறுத் திடுமம் புவிகள்கா டாகுந் தானெனச் சாற்றுவர் பெரியோர். (கஎஉ)

சாற்றிய வரச னொடு சனி யாதல் தரைசுத னாதல்பாம் பாதல்-நாலுறக் குருவுக் கேழினின் றூலுந் தகர்க்கிறை யோடுபோம் புறிவும், போற்றிய குசனாக் காரிகூ டிடினும் புலவுமீன் தேள்கடையினிலும் - புணரிஷ பத்தின் மத்தியி லேனும் பொருசிங்கத் தாதியி லேனும், கூற்றமாஞ் சனியின் றன்மழை யின்றிக் குவலயத் துளபல வுயிரும் - கொம்பசி யாலுஞ் சமர்க்களத் தாலுங் குறுகிமாண் டிடுமெனக் கூறே, ஏற்றமீ னிடபந் தேள்தனு சிங்க மிவையினிற் காரிசே யாதல்-இருந்துவக் கிரந்தா னுகிமன் னவர்க்கே யிடுக்கமுண் டெனவுரைத் திடுவர். (கஎங)

இடும்பைசேர் வெள்ளிக் கேழினிற் குருவு மிருந்திடின் மாரிபெய் யாதாம் - இரும்புதன் வெள்ளி நாப்பணி னிரவி யிருக்கவெய்யோற்குமுன் சனிசேய், உடன்கலந் திருக்க மாரியு மறுத்தே யுலகினிற் பஞ்சமென் றுரைக்கும் - உயர்சனி தனக்கு மூன்றுபன் னொன்றி லும்பர்கோன் குருவும்வந் துறையில், கெடும்புவி தன்னி னரர்பசு முதலாய் நின்றநாற் காலுயிர் தனக்கும் - சேயியாள் பவர்க்குங்

துன்பமே யாகு நின்றிடெ பய்குபா சற்கே, நிடம்பெற வைந்தாம வீட்டினி லரசன் சேர்ந்தற விருந்தகா லயினில் - செகமொரு மூன்றி னுளபல வுயிர்க்குந் தீயதுறு மென்றுரை செய்வர். (கஎ௬)

## மறுமையிலடையுமிடம்.

### வேறு.

பன்னிரண்டா மதிபனைச சேர்ந்தவராற் சொல்லும் பலன்குரு சுக்கிரனாயிற் றெய்வ லோகம், பின்னுசதி ருடனகூடி விராஜ யோகம் வெண்மதிய முடன்கூடிற் பிதிர்லோ கந்தான், மன்றுகுச லோக கூடில் வீர சொர்க்கம் மந்தனபாம புடன்கூடின் மறலிபதி யாகும், உன்னுபுத னுடன்கூடி லெகமெங்கே தாம்போய் உற்றிருக்க வேண்டுமெனி லங்குறைய லாமே. (கஎ௭)

## மாரகதிசையறிய.

### வேறு.

மாரகத்தின்றிசையறிய வருநான்காந்திசைசனியேவந் தூற்றாலும்
பார்தனக்குச்சுதன்செவ்வாயைந்தாகுந் திசைதானேபரிந்துற்றாலும்
பேருதித்தவாறாகுந் திசையரசரானாலும்பின்புராகு
சீருதித்தவேழாகுந்திசையானாலும் மரணந்திண்ணந்தானே. (௬எக)

## கிரகதிசையறிய.

### வேறு.

கார்த்திகைமுதலொன்பானாள்களும் பகல்திங்கள்செவ்வாய்
கார்த்தவிராகுபொன்சுன்கவின் புந்திகேதுவெள்ளிச்

சேர்த்தவர்க்கிழுறையாகச் செப்பியதிசைகளாகும்
ஏர்த்தமற்றையநாண்மீனு மிவ்வாறேகொள்ளற்பால. (௧௭௭)

## கிரகதிசாவருடமறிய.

சூரியன்றிசைக்காண்டாறு திங்கட்குப்பத்துச்செவ்வாய்க்
காருமோரேழிராகுக் கறைபதினெட்டுப்பொன்னுக்
கேருறீரெட்டுமந்தற்கியம்பு பத்தொன்பதாகும்
சீரில்புந்திக்கோர்பானேழ் சிகிக்கேழ்வெள்ளிக்கைந்நான்கே. ()

### புந்திபிரிக்கவகை.

கோள்களின்றிசையிற்புத்தி குறித்திடிற்றிசையோனாண்டை
நீள்புத்திநாதனாண்டா னேர்படப்பெருக்கிக்கண்ட
வாளமர்தொகையொன்றிற்கு மருவுநாண்மூன்றதாகும்
வாள்கடல்கெண்டைவண்டு வனசமாம்விழியினாளே. (௧௭௧)

### சித்திரம்பிரிக்கவகை.

அவரவரபகாரத்தினாண்டொன்றின் மூன்றுநாளும்
நவிலுமாதங்கால்நாளு நாலொன்றிற்பாதிக்கன்னல்
இவைமூன்றுதொகையுங்கோட்க டிசையாண்டாற்பெருக்கிவந்த
தவலறுதொகையைச்சேர்க்கத் தான்வருஞ்சித்திரந்தான். (௧௮0)

### உள்சித்திரம்பிரிக்கவகை.

வெண்பா.

ஒருநாளுக்கோரரை நாழிகையாத்தோறறும்
ஒருநாழிகைக்கரைவிநாழி-தூருவமாம்
எந்தத்திசைக்குமிவர் வருடங்கொண்டென்னச்
சிந்தனைக்குட் சித்திரமாச்செப்பு. (௧௮௧)

### போதகன் - வேதகன் - பாசகன் - காரகனறிய.

கூறுபலனைக்கொடுமென்பான் போதகனும்
வேறுபண்ணித்தட்டுவிப்பான் வேதகனும்-தேறுபலன்
கூட்டுவிப்பான்பாசகனுங் கோலமகாதிசைக்கே
ஈட்டுபொருள் காரகனீவான். (கூஅஉ)

பானுதிசைக்குமந்தன் பாசகனுஞ்சுக்கிரனே
மானேகேளவேதகனுமன்னவனும்-தேனனையாய்
சாரகனுஞ்செவ்வாயுங் காசினியோர்தாமறிய
வரணியும் போதகனுமே. (கூஅங)

இந்துதிசைக்குவெள்ளி யேற்றதோர்பாசகனும்
விந்தைமலர்நண்பனே வேதகனும்-மந்தனே
கயசாநதிபுடைசூழ் காசினியிற்காரகனும்
அங்காரகன் போத கன். (கூஅச)

மங்களனூர்தந்திசைக்கு மார்த்தாண்டன்பாசகனும்
திங்களிரும்போதகனுஞ் சேயிழையீர்-பொங்குபுகழ்
மேயபுதன்வேதகனு மித்தரணியோரறிய
ஆயசனி காரகனு மாம். (கூஅரு)

புந்திதிசைக்குப் புரவலனேபோதகனும்
சந்திரனேபாசகனுந்தானவன்-இந்துநுதல்
மின்னனையீர்செவ்வாயும் வேதகனும்வெள்ளியோ
மன்னுபுகழ் காரகனுமாம். (கூஅசு)

வேந்தன்மகாதிசைக்கு வெய்யவனேவேதகனும்
போர்த்துவருஞ்செவ்வாயே போதகனும்-காந்திசெறி
சந்திரனே காரகனுக்கையலே தாரணியில்
மந்தனே பாசகனுமே. (கூஅஎ)

வெள்ளிமகா திசைக்கு வேர்தனேபோதகனும்
தென்னுபுதன்பாசகனுந் தேயகதிரும்-மென்னலரும்
காரகனேதானெருக்காரிமைய வேதகனும்
வாரணிபுய கொங்கைமயிலே. (கூஅஅ)

சனியின்றிசைக்குச சசிபோதகனும்
இனியசெவ்வாய வேதகனென்றேக்கூம்-கனிமொழியாய்
வெள்ளியேபாசகனும் வேர்தனேகாரகனும்
தென்னுராயிழோ ருரைத்தசிர். (கூஅகூ)

ஒருவர்மகா திசைக்கு ளுற்றபலனுண்ணோ
வருவர்நவகிரகர் மாதே-அரைவரில்
போதகனும்பாசகனும் போற்று பொருள்காரகனும்
வேதகனு மாகிவருவார். (கூகூ0)

இந்தப்படிநால்வரெய்தி யொருவர்திசைக்குள்
வந்துபலனுன்றும் வகையறிமே-சிந்தித்
துரைத்தபலனைத்திருக்கு மொண்டொடியேசொளாய்
தரைத்தமிழோர் தாமபியராம். (கூகூக)

---

## திசாபுத்திபலனறிய.

### சூரியதிசாபுத்திபலன்.

### வேறு.

அருக்கனிலருக்கன்புத்தி யரியநாளுற்றெட்டெக்கும்
கருக்கொடுமுற்றுற்கேடு கலகமஞ்சனனைநம்பீடை
வருத்தமாந்தலைநோயுண்டாம் வலககாதில்வலியுண்டாமே
பெருக்கசீரிழிவு மேடமாதத்திற்பீடைதானே. (கூகூஉ)

இரவியிலிந்துபுத்தி யினியநூற்றெண்பதாக்கும்
அரசரான்மகிழ்ச்சிலாப மரிகவாகனமுமுண்டாம்
பாவியமணமாம்பெண்ணாற் பகையிடகண்ணினோயாம்
திரமெனுங்கடகத்திங்களவினை காணுந்தாமனே. (௧௬௩)

ஆதித்தன்றன்னிற்செவ்வாய் புத்திநூற்றிருபத்தாறும்
வாதிதவியாதிசண்டை முறக்கால்வரட்சிபீடை
சாதித்தவுற்றாற்கேடு சனம்பொருட்சேதமாகும்
போதித்தபொருளுஞ்சாயும் பூமியின்பலன்காதே. (௧௬௪)

சூரியன்றனிலேராகு சுகத்தையேசொல்லிலென்றால்
ஏருற்றநாண்முந்நூற்றோ டிருபத்துநான்கதாகும்
பாரியவிடிவிஷத்தாற்படை பயம் பிறத்தார்பின்னம்
வீரியமைந்தனேசாந்திரதத்தினின் மேவுவானே. (௧௬௫)

எதிருறுங்கதிரிற்பொன்னி னிருநூறோடெண்பத்தெட்டும்
கதிபெறுமுற்றோர்நட்புங்கல்வியுஞ் செல்வமுண்டாம்
மதியுறுமிராசசேவை மககளுஞ்சுத்தமுண்டாம்
அதிகசத்துருவைவெல்லு மதிசயமிகுதியாமே. (௧௬௬)

நன்கதிர்சனிமுந்நூற்று நாற்பதோடிரண்டிருக்கும்
மன்பயமக்கட்பீடை மனத்துயர்பகைவருண்டாம்
தன்பொருட்சேதமுந்தியடுப்பது சரீரபீடை
இன்பமேயிலைமண்ணி லெவர்களும்பகைவராமே. (௧௬௭)

நற்கதிர்தன்னிற்புந்தி நாளதுமுந்நூற்றாறும்
வற்கமும்பகையதாகுமனத்திகில் சரீரபீடை
கற்கருவிஞ்சமூர்த்திகடுப்பது வழக்கமுண்டாம்
சொற்புகழ்மன்னனுசந் துக்கமுமிகுதியாமே. (௧௬௮)

ஆதித்தன் றனிலேகேது வனுகினூற்றிருபத்தாறும்
சோதித்தவினைவருகுன் றுந் தூரதேசத்திற்போவார்
வாதித்தவிஷமுமுண்டாம் வழக்குண்டுமனைவேறாகும்
பேதிக்குமுற்றார்கேடு பிணக்குண்டுபலன்செய்யாதே. (கூகூகூ)

அருக்கனில்வெள்ளி மூந்நூற்றறுபதுநாளிலாபம்
திருக்கலியாணஞ்செல்வஞ் செம்பொன்னுமிகவுமுண்டு
வருத்தமாஞ்சரீரநோயுமலர்க்கணில் வியாதிதோன் றும்
உருக்கியபிணியுந்தீரு முண்மையாய்க்கருமநன்றே. (க000)

## சந்திரதிசாபுத்திபலன்.

சந்திரன் றன்னிலேதான்றனக்கு நாள்வருமூந்நூறும்
விந்தையாங்கன்னிசேர்வள்வீரமன் னேகமுண்டாம்
மூந்தியகாரியங்கணினைத்தது முடியுமேலும்
இந்திரன்றனைப்போன்மைந்த னினிதுடனுண்டாங்கண்டீர். ()

நண்புறுமதியிற்செவ்வாய் நாளிருநூற்றுப்பத்தும்
பண்பிலாவழக்குச்சண்டை பயித்தியங்களவுநோயாம்
தண்பொருள்சேதங்குட்டந் தழற்பயமேடமாதம்
திண்பெருந்தளையேபூணு மேந்திழைக்கலகஞ்சேரும். (க00உ)

அம்புலிதனிலேராகு வைந்நூற்றுநாற்பதுக்குள்
செம்பொனுஞ்சேதமாகுஞ் செற்றலர்பயம்வியாதி
நம்பியர்துன்பம்ராச நிஷ்டூரமிகவுமாகும்
வம்பலர்குழலினாளே மதலையர்பீடையாமே. (க00௩)

நன்றிசேர்மதியிற்பொன்ன னூறேடெண்பதுக்கும்
வென்றிசேர்குதிரையானை மேன்பொருடானியங்கள்
குன்றெனுமுலையாய்சேருங் கொற்றவனாலேயின்டம்
கன்றுகன்காலியுண்டாங் காளையைப்பெறுவர்தாமே. (க00௪)

மதிசனிற்காரிபுத்தி மாதம்பத்தொன்பதுக்கும்
பதிகெடுங்கன்றுகாலி பற்றறுமனதிற்றுக்கம்
விதியுறுமனையாளோடு மெய்ப்பொருட்சேதமாகும்
சதிபெறுகருத்தோனாலே கோள்வருஞ்சாற்றினேன்கேள். (௧௦௦௫)

சந்திரன்றன்னிற்புத்தி தான்பதினேழுமாதம்
அந்தரக்கலகம்போக மழகியமக்கட்பேறும்
சிந்தைசேரிராசயோகஞ் சேர்ந்திடுகினைத்ததெல்லாம்
முந்தியவித்தைலாபம் புரட்டாசிமுடிவிற்றானே. (௧௦௦௬)

நிலவினிற்கேதுவேழு மாதமுநெருப்பாற்பீடை
தொலைவிலாச்சரீரம்வீங்குஞ் சுற்றஞ்சாயிடக்கண்ணோயாம்
மலைவதுபயமுமுண்டா மதிகதண்டனையுமுண்டாம்
பலசனம்வெறுப்புவந்து நாசமாம்பகையுண்டாமே. (௧௦௦௭)

வட்டமாமதியில்வெள்ளி மாதங்களிருபதுக்கும்
திட்டமாம்வியாதியுண்டாஞ் சேர்ந்திடுவிசனங்காட்டும்
நட்டமாமர்த்தநாச நாளிலேவிரோதமுற்றார்
கஷ்டமாஞ்சத்துருவாலே காரியஞ்சேதமாமே. (௧௦௦௮)

வெண்மதிசனிலேவெய்யோன் வேண்டியவாறுமாதம்
உண்மதிசுரமும்பித்த முருவமுங்குலைந்துவேறாய்
கண்மதியங்கந்தன்னிற் கடுவலிநோயுமுண்டாம்
பண்புறுகுணத்தினாளே பலனுண்டுபலன்செய்யாதே. (௧௦௦௯)

---

## செவ்வாய்திசாபுத்திபலன்.

நன்றிசெப்சேயின்மாத நாலுநாளிருபத்தேழும்
கன்றிடுங்காலிணைகள் கடித்திடுமேடமாதம்
வென்றிசேர்மன்னரச்சம் வெம்புநோய்கீசராலே
கொன்றிடுக்தேளின்மாதத் துடன்வெட்டுக்குத்துமாமே. (௧௦௧௦)

செவ்வாயில்ராகோராண்டுந் சேர்ந்தநாள்பதினெட்டுக்கும்
ஒவ்வாதவிதைத்தாற்றேளாந் திங்களிலுற்றார்நாசம்
இவ்வாறுமேகக்கட்டி யிருந்திடுந்தலம்வேறாகும்
கொவ்வைவாய்மானேகுட்டங் குரூரமாம்பீடையாமே. (௧0௪௧)

முழங்கியசேயிற்பொன்னன் முந்நாற்றுமுப்பத்தாறும்
வழங்கிடுமர்த்தநாச மன்னராம்பகையுமுண்டு
தழங்கிடுந்திசைதொடங்கி சத்துருபலருமாவர்
அழுங்கலிந்நாளிற்செல்வ மாசாரலுறவுமாமே. (௧0௪௨)

மருவியசேயிற்காரி மாதமீராறுமொன்றும்
கருதியநாளொன்பானுங் கலகமாம்வழக்குச்சண்டை
பொருபடையர்த்தநாசம் பொருந்தியமெய்யிற்குட்டம்
மருவியநிலையுங்கெட்டு மனத்தினிற்கிலேசமாமே. (௧0௪௩)

முந்தியசேயிற்புந்தி முந்நானூறைம்பத்தேழும்
செந்திருவரிவைசேர்வள் செல்வமுமிகுதியாகும்
வந்திடுநோயுந்தீரு மருவியகன்னிமாதம்
நிந்தையாமரவுதீண்டு நீடியபலன்செய்யாதே. (௧0௪௪)

செய்யவன்றனிலேகேது சேர்ந்திடுமாதநான்கு
உய்புநாளிருபத்தேழு முடன்பகைமாதராலே
மெய்யிலேவியாதிதோன்றம் விதைபயமிகுதியாகும்
தையலார்பொருட்டாணிந்தை சத்துருமிகுதியாமே. (௧0௪௫)

நாடியசேயிற்சுங்க னற்றிங்களீரேழுக்கும்
நீடியபொருளுந்தேரு நேரிழைவாதுசேர்வள்
தேடியதெய்வபூசை செய்வன்மாதவர்கள்சேர்வர்
வாடியசிரங்குதேமல் வாகனம்பெறுவர்தாமே. (௧0௪௬)

அங்கியிற்பரிதிதிங்க ளுலுநாளாறுமாகும்
மங்கியகுட்டக்கண்ட வியாதியாமனதிற்றக்கம்
செங்கனற்பயமுண்டாகுஞ் சீர்மறைபவாற்றுன்பம்
இங்கிதமனையாளுறவு மெவாகளும்பகைவராமே. (௧௦௧௭)

நலமுறுசேயிலிரந்து நாடியநிகரோமும்
பலமுறம்பூமிலாபம பலிதநிதிங்கள்றுநாலி
இலகியபொன்றைமுத்து பின் பமாமாடையுண்டாம்
தலமறுபேதம்பின்பு தீர்ச்சிவெக்செய்துந்தானே. (௧௦௧௮)

## இராகுதசாபுத்திபலன்.

இராகுவிலிராகுமாத நாலெட்டுநாளீராறும்
வாதுறுவெந்தாறுசை மனத்துயர்விஷத்தாற்பீடை
ஏகமாமனையாலின்ப மிருந்திடுக்தலபேதங்கள்
காகசேர்சிறத்தறுலே கலகமுமயசோருண்டாமே. (௧௦௧௯)

பாரியவிராகின்மன்னன் பரிவுடன்புசிக்குந்திங்கள்
நாரியேயிருபத்தெட்டு நாருறுவெட்டினின்பம்
ஆரியராலேசெல்வ மாசானமகிழ்ச்சியுண்டாம்
காரியமெல்லாங்கூடும் காரிழைமணமுண்டாமே. (௧௦௨௦)

வடிவுளவிராகிற்காரி மாதமுப்பத்துநான்கும்
படிமிசைநாளாறுக்கும் பகைமனத்திடர்வியாதி
முடிபாதவழுக்குச்சண்டை மூண்டிடும்வாதபித்தம்
இடியுறுசெங்கைசோதி சதயமுமிகுதிநோயே. (௧௦௨௧)

வந்தியிராகிற்புந்தி மாதமுப்பதின்மேனாட்கள்
முந்தியமூவாறுக்கு முயற்சியாம்வாழ்வுண்டாகும்
சிந்தையிற்றெய்வபத்தி சிலபொருள்வந்துசேரும்
விந்தையாமழலைசேரு மேலுறுபகையுண்டாமே. (௧௦௨௨)

மருவியராகிற்கேது மாதமீராறுமிக்க
கருதியநாண்மூவாறு கடிவிஷத்தாலேயையம்
தருமகவுக்குப்பீடை சரீரமேவீங்கிரோயாம்
அரிவையர்தமக்குத்துன்ப மரசராலச்சமாமே. (கOஉங)

மன்னியவிராகில்வெள்ளி மாதமோமுப்பத்தாறும்
பொன்னுடன்பொருளுஞ்சேரும் பூஷணமிகுதியுண்டாம்
மன்னியமங்கைசேர்வ ளரசராண்மகிழ்ச்சியுண்டு
பின்னும்வஞ்சனையாற்றுன்பம் பீடைவந்தகன்றுபோமே. (கOஉச)

ராகுவிலிரவிமாதம் பத்துடனெண்மூவெட்டும்
வாகுறுகுலத்தாற்சண்டை மன்னராற்றஞ்சமாகும்
சேகுறுமனையாள்பிள்ளை பெருதுருசிலுகதாகும்
ஆகமூவிதத்தாலைய மிருப்பிடமகலுந்தானே. (கOஉரு)

உதித்திடுமிராகிலிந்தி னுயர்திங்களீரொன்பானும்
மதித்திடும்பந்துநாச மனைவியாற்பொருளுஞ்சேதம்
கதித்திடுமேத்தமோணத் திசையினிற்கால்கணோவு
விதித்திடுந்தலம்விட்டேகும் விஷத்தினாற்றுன்பமாமே. (கOஉசு)

இன்புறுமிராகிற்செவ்வாய் மாதமீராறுமிக்க
வன்புறுநாண்மூவாறு மக்கினிபயங்கிலேசம்
மன்பகைவிஷத்தாற்பீடை மருவுசண்டாளரின்பம்
துன்பமாங்களவுசண்டை துயர்மனைகிலேசந்தானே. (கOஉஎ)

குருதிசாபுத்திபலன்.

மருவியபொன்னின்மன்னன் மாதமையைந்துநாளோ
ஒருபதினெட்டினுக்கு முயர்பிரதாபமிக்க
பொருளுடன்முனியங்கள் பூஷணம்பூமிலாபம்
அரிவையர்சேர்த்தியின்ப மரசராண்மகிழ்ச்சியாமே. (கOஉஅ)

பொருந்தியகுருவிற்காரி புகழ்திங்களாகும்பத்து
வருந்தியநாளீராறும் வாகனம்பொருளும்வாய்க்கும்
திருந்தியகால்கைவாதஞ் சேயிழைதனக்குத்துன்பம்
இருந்திடம்வெற்றியில்லை யிடர்வந்துநீங்குந்தானே. (௧௦௨௯)

மருவியகுருவிற்புந்தி மாதமோவிருபத்தேழும்
அருகுறுநாளோராறு மாடலும்பாடன்ஞானம்
வருவதுபூசையாலும் வளமுளமாதர்மைந்தர்
பெருகிடுஞ்செல்வமன்றூற் பெருமையும்புகழுண்டாமே. (௧௦௩௦)

பாவியகுருவிற்கேது பதினொருமதிநாளாறும்
திரமுளமாதர்கேடு திரியுமேதேசமெங்கும்
உரமுளவுற்றார்மற்றை யுறவினர்பகையதாகும்
திரவியமனையாடன்னு னிலைவிட்டுப்போவதாமே. (௧௦௩௧)

மருவியகுருவில்வெள்ளி மாதமுப்பத்திரண்டு
நிரைபரிகட்டுவர்க்க நிலைமையாம்பொருளுஞ்சேரும்
பொரையுளகன்னிமாதம் பூமியும்போகமுண்டாம்
குரைகடற்சுற்றத்தோடு குணமுடன்வாழ்வர்தாமே. (௧௦௩௨)

உலகுறுகுருவிற்பானு வொன்பதுநாண்மூவாறும்
நலமுறுமர்த்தலாப நாடியகருமங்கூடும்
பலகுறைநெருப்பிற்காற்றிற் பிணிபலர்பகையும்பீடை
சலகமாமகத்திற்பின்பு காரியநன்மையாகும். (௧௦௩௩)

நின்றதோர்குருவிலிந்து நேர்பதினாறுமாதம்
வென்றிநற்சிவிகைமுத்து வெண்குடைபணியுமுண்டாம்
அன்றநன்மனையாண்மைந்த ரறிவுளோர்பொருளுஞ்சேரும்
என்றுநற்கருமமெல்லாந் தெய்வத்தாலெய்துந்தானே. (௧௦௩௪)

பாங்குளபொன்னிற்செவ்வாய் பதினொன்றுமதிநாளாறு
தீங்குறுவினைகளுண்டாந் திருடராற்றழலாற்றுன்பம்
ஆங்குறுமுற்றூர்சேத மல்லதுபிணியுமுண்டாம்
நீங்கியேயில்லைவிட்டேகு நினைத்ததுமுடிந்திடாதே. (௧௦௩௫)

மாதயவக்குருவில்ராகு மாதமோரிருபத்தெட்டும்
ஓதியநாண்மூவெட்டு முடன்பகைசிறவழக்குச்
சேதமாம்பொருள்விரோதஞ் சேயிழைதனக்குத்துன்பம்
மூதுகண்மிகவுண்டாகுந் தொடர்ந்திடுஞ்செல்வம்போமே. (௧௦௩௬)

சனிதிசாபுந்திபலன்.

காரியிற்காரிமாதங் கருதியமுப்பத்தாறும்
வீரியமூனறுநாளு மெய்யினில்வியாதிதோன்றும்
சீரியவடிமைமைந்தர் செல்வமுங்குறையும்பின்னும்
கூரியவுறவுதன்னாற் கொடும்பகைதானுண்டாமே. (௧௦௩௭)

பங்கினிற்புந்திமாத நாலெட்டுநாளொன்பானும்
இங்கிதகல்விஞான மெய்யறிவுடைப்பொருளுஞ்செல்வம்
மங்கையர்மருவிக்கூடும் மைந்தருஞ்சுற்றமுண்டாம்
பொங்கமாய்மன்னராலே புகழ்ந்துவாழ்ந்திருப்பர்தாமே. (௧௦௩௮)

படிமிசைசனியிற்கேது பதின்மூன்றுமதிநாளொன்பான்
கடியதோர்வலக்கால்வாதங் காணுமேபித்தரோகம்
மிடியதுமைந்தராலே விஷபயமத்தநாசம்
கொடியிடையவராற்றுன்பங் கோளினாற்கலகமாமே. (௧௦௩௯)

முனிவுறுசனியில்வெள்ளி மாதமோர்முப்பத்தெட்டு
இனியதோர்பணிநல்லார்த மின்பமும்வெற்றியுண்டாம்
வனிதையர்சேர்வர்லாப மக்களுஞ்சுற்றமுண்டாம்
தனியொருபகையுமுண்டாந் தன்னையும்வெல்லலாமே. (௧௦௪௦)

பரவியசனியிற்பானு பதினொன்றுநாளீராறும்
உரமுளரத்தமேக முதாரத்திற்சூலைகண்ணோய்
திரமுளமனையாண்மக்கள் சிறுத்திடுநோயினாலே
கரமதுவெரிவாங்காலுங் கடுவலிவாதமாமே. (௧௦௪௧)

மருவுறுசனியிலிந்து மாதம்பத்தொன்பதுக்கும்
விதமதாகுகலகம்பீடை வீட்டினில்வழக்குச்சண்டை
பதனமாம்பணிபூணாரம் பல்வளம்பொருளுஞ்சேதம்
அதனமாந்தலங்கள்விட்டே யவதியான்மீள்வர்தாமே. (௧௦௪௨)

பலனிலாச்சனியிற்செவ்வாய பதின்மூன்றுநாளொன்பானும்
குலங்களிலினமிக்க கொடும்பகைபழியுங்காட்டும்
அலைச்சிடுந்தேசமெங்கு மனைவரும்விரோதமாவர்
தலங்களிற்பொன்னுற்சோரந் தலம்விட்டுப்பிரியுந்தானே. (௧௦௪௩)

முன்னமேசனியில்ராகு முப்பதுமதிநாளாறும்
சொன்னமுஞ்சேதமாகும் விஷமதுநாத்தித்தீண்டும்
இன்னமுஞ்சரீரமெங்கு மேருதவியாதியுண்டாம்
அந்நியர்பகையதாகு மல்லலுமிகுதியாமே. (௧௦௪௪)

முன்புறுசனியின்மன்னன் முப்பதுநாளீராறும்
அன்புறுமடியார்சேர்வ ராடையாபரணமுண்டாம்
இன்பமாமரசராலே யெண்ணியகருமமாகும்
மின்கொடியுடனேசுற்ற மிகுதியாம்பலனுண்டாமே. (௧௦௪௫)

## புததிசாபுத்திபலன்.

வலம்புரிபுதனிற்புத்தி மாதமோரிருபத்தெட்டும்
துலங்குநாண்மூவொன்பானுஞ் சுற்றமுந்துணையுமுண்டாம்
பலந்தருமர்த்தலாபம் பாக்கியமிகவுமுண்டு
நலம்பெறுஞானங்கல்வி நாடியகருமமாமே. (௧௦௪௬)

பரிந்திடும்புதனிற்கேது பதினொருமாதம்பின்னும்
வருந்துநாண்மூவொன்பானு மாதலந்தனைவிட்டேகும்
பொருந்திடும்வியாதிபீடை பொருட்சேதமுற்றூர்க்கேகு
மருந்திடுதுணைத்தாற்றுன்ப மனமதுகிலேசந்தானே. (௧௦௪௭)

வாசமாம்புதனில்வெள்ளி மாதமுப்பதாமேறென்று
நேசமாமக்கட்பேறு நேரிழையுடனேயின்பம்
பாசமாஞ்சுற்றம்வித்தை பலவணிமற்றமுண்டாம்
தேசமேபோனூர்மீள்வர் சேயிழைமணமுமாமே. (௧௦௪௮)

நேருற்றபுதனிற்பானு நீடியமாதம்பத்தும்
சீறுற்றநாட்களாறுஞ் செந்தழற்பயங்கிலேசம்
பாருற்றமனையாள்பீடை பகைவருமிடையூறுண்டாம்
வாருற்றகொங்கையாளே மனனமாற்றுன்பமாமே. (௧௦௪௯)

வாரணப்புதனிற்சோமன் மாதமேபதினேழுக்கும்
பூரணமானசோகை கண்டபின்புறங்கால்வீங்கும்
காரணக்கலகம்பெண்ணாற் கனபீடைசிலுகுமுண்டு
தாரணிதன்னின்மாந்தர் தமக்கெலாம்பகையதாமே. (௧௦௫௦)

பன்னியபுதனிற்செவ்வாய் பதினொன்றுநாண்மூவொன்பான்
தன்னிலேபித்தரோகங் காமாலைதலைநோய்க்காடு
வன்னியர்பகைவிரோத மாயுதத்தாலேபீடை
முன்னொருபகையுமுண்டு முடியவேகலகந்தானே. (௧௦௫௧)

நற்புதனறனிலேராகு முப்பதுநாண்மூவாறும்
நிற்பதோர்நிலைவிட்டேகு நீசரால்விஷத்தாலையம்
மற்பொருபூசலுண்டா மனத்திடரர்த்தவானி
சொற்பனர்தலைநோய்பித்தஞ் சூட்சமாமன்னர்தானே. (௧௦௫௨)

புந்தியிற்பொன்னன்மாதம் புகழ்பெறவிருபத்தேழும்
வந்தநாளாறுமின்ப மன்னராண்மகிழ்ச்சியாகும்
சிந்தையிற்கிலேசமில்லை சிறவருஞ்சுற்றமுண்டாம்
பைந்தொடிமணமதாகும் பாக்கியமிகவுண்டாமே. (௧0௫௩)

நன்றிசேர்புதனிற்காரி நாலெட்டுமெதிராளொன்பான்
இன்றிடுநன்மைகானு மெதிர்த்திடும்பகையுமுண்டாம்
சென்றிடும்வலக்கானோயாந் திசையுத்திராடந்துன்பம்
மன்றிடுமுற்றார்க்கேடு மனமதிற்கிலேசமாமே. (௧0௫௪)

கேதுதிசாபுத்திபலன்.

ஈண்டியகேதிற்கேது நாலுநாளிருபத்தேழும்
வேண்டியமனையாண்மக்கட் சகோதரவெறுப்புண்டாகும்
பூண்டிடும்விலங்குகாலில் புரட்டாதியுள்ளேதேறும்
ஆண்டதுவருஷத்தார்க்குத திசையதுவவதிதானே. (௧0௫௫)

பூரியகேதில்வெள்ளி புத்தியீரேழுமாதம்
பாரியுமக்கட்பேறு பலித்திடுங்கன்றுகாலி
காரியமெல்லாங்கூடுங் கடைசியிற்பீடையுண்டு
வீரியமனையானோயா மீளவுமகன்றுபோமே. (௧0௫௬)

அந்தமாங்கேதிற்பானு நாற்றிங்களாறுநாளும்
சிந்திடும்பூமிவிட்டுத் தேசம்போய்வருவன்பின்பு
சுந்தரமேனியெங்குஞ் சுரந்தலைநோயுண்டாகும்
மந்தரமுலையினாளே மனமதிற்கிலேசந்தானே. (௧0௫௭)

சாதககேதிலிந்து தன்புத்தியேழுமாதம்
மாதரால்வழக்குச்சண்டை மைந்தர்க்குப்பீடையுண்டாம்
போதவேகன்றுகாலி பொன்னுமாபரணமுண்டாம்
சீதளமுகத்தினாளே தீங்குவந்தகன்றுபோமே. (௧0௫௮)

கடையரவதனிற்செவ்வாய் கலந்திடுமாதநாலு
இடையுறுமிருபானேழ்நா ளிடர்பயமர்த்தவானி
படையுறுவழக்குச்சண்டை பலபலவிரோதமாகும்
தடையுறும்பெண்ணாற்கேடு தழல்பயமிகவுண்டாமே. (கO௯க)

கேதுவிலிராகுபுத்தி கேள்பன்னிரண்டுமாதம்
மீதியிரொன்பாநாளும் விஷபயம்வந்துதீரும்
மாதர்கடமக்குப்பீடை மன்னவநேசமாவான்
போதவேயர்த்தநாசம் புகழ்நிலையின்றிடாதே. (கOகO)

பரிவுளகேதுவுக்குள் பாங்குள்ளமன்னன்புத்தி
ஒருபதினொன்றுநாட்க ளோராறுமர்த்தலாபம்
மருவியமன்னாச்சேர்த்தி விஷபயம்வந்துதீரும்
திருவெனமனையாள்சேர்வள் செல்வமுமிகுதியாமே. (கOகக)

சரியுறுகேதுவக்குட் சனிபுத்தியானமாதம்
பதின்மூன்றுநாளொன்பானும் பலபொருட்சேதமாகும்
மதிதலம்பேதமாகு மங்கத்திற்சொறிசிரங்கு
மதிமுகத்தரிவைபீடை மனமதுகிலேசமாமே. (கOகஉ)

குலமுளகேதிற்புந்தி குறித்திடும்புத்திமாதம்
நலமுறுபத்துமொன்று நாளிருபத்தேழுக்கும்
தலமதுவிட்டுப்போகுந் தமரினாற்பயமுண்டாகும்
நிலைமையாய்ப்புத்திரசோப நினைத்ததுமுடிந்திடாதே. (கOகந)

சுக்கிரதிசாபுந்திபலன்.

வண்மையாம்புகரில்வெள்ளி மாதங்களுற்பதுக்கும்
உண்மையாம்பணிகண்முத்து முயர்குடைபுரவியானை
தண்மையாம்புன்மைநீங்கி நாளிலேதனமுஞ்சேரும்
எண்மையங்கிசத்திற்றுக்க மெய்துமைப்பசியிற்றானே. (கOகச)

சிறந்திடும்புகரிற்பானு திங்களீராறுந்துன்பம்
குறைந்திடுந்தனமுநாளிற் கொடும்பகையடைசராலே
பறந்திடுமனையாண்மக்கள் பலருடன்வழக்காமென்க
உறைந்திடுதெய்வமுள்ளு முறவதுபகையதாமே. (கO௬௫)

மருவியபுகரிற்சோமன் மாதமோரிருபதுக்கும்
கருதியகருமநாளில் வந்துகைகூடுமென்க
உருகுறுமனையாளாலே யடர்பகைவந்து தீரும்
சருவியவின்பமாதர் தம்மொடுமிணக்கமாமே. (கO௬௬)

புண்ணியபுகரிற்செவ்வாய் புகறிங்களீரேழுக்கும்
நண்ணியபூமியுண்டா நாரியாற்கருமநாசம்
எண்ணியதேவர்சேவை யிருவராற்பகையுண்டென்னும்
கண்ணிநோய்மெய்யிற்குட்டங் கண்டது தீருந்தானே. (கO௬௭)

திருந்தியபுகரில்ராகு திங்களோர்முப்பத்தாறம்
பொருந்தியமுனியைப்போலே பூமியிற்றபசுசெய்வன்
வருந்தியேமைந்தராலே வருங்கலகநகணமெத்த
அருந்தியமருந்தினாலே விஷமதாயலைவன்றானே. (கO௬அ)

முன்புறுபுகரின்மன்னன் முப்பத்திரண்டுமாதம்
இன்புறுதானியங்க ளெய்துமேயர்த்தலாபம்
அன்புறுமறையோராலே யதிசயமிகவுமுண்டாம்
மன்புகழ்மேதாணிவிட்டத் திசையினில்வருததமாமே. (கO௬௯)

சாலவேவெள்ளிதன்னிற் சனிமாதமுப்பத்தெட்டும்
மூலமாநோயினாலே முயங்கியேமீளுங்கைகால்
வேலெனும்விழியாய்துன்ப மெய்யினில்ரோகமுண்டு
ஆலமாம்விஷம்போலன்ன மரோசிகமாகுந்தானே. (கO௭O)

வெள்ளியிற்புந்திமாதம் விரும்புமுப்பந்நூனான்கும்
தெள்ளியமனையாண்மக்கள் சீருடன்பொருளுண்டாகும்
வள்ளியகல்விஞானம் வாக்கினற்பாடலாகும்
நள்ளியசிவப்பனாலே நன்மைகள்பலவுண்டாமே. (சoஎக)

இட்டமாம்வெள்ளிதன்னிற் கேதுவீரேழுமாதம்
துட்டமாமிருகத்தாலே துன்பமுமிகவுண்டாகும்
அட்டமாமனையாடன்னி னனுபோகத்தாலேநோயாம்
திட்டமாய்விஷந்தான்வீட்டிற் றீண்டியேமீளுந்தானே. (சoஎஉ)

புத்தியின்பலன்கடம்பைப் பொதுமையாயுரைத்தாரேனும்
சித்தமாய்க்கோள்கணின்ற திரிகோணக்கேந்திரமுசசம்
தத்தியவியமாறெட்டுப் பகைநீசந்தான்சேரம்சம்
ஒத்தநல்லாதிபத்தியம் வர்க்கமோடவஸ்தைவக்கிரம். (சoஎங)

பாவத்திற்கண்டயோக மவயோகந்தன்னைப்பார்த்துப்
பூவருமானேநல்ல பலன்களைப்புகலவேண்டும்
தாவறுசித்திரமுட்சித் திரத்திற்கும்புத்திபோல
ஓவறப்பலன்கள்சொல்வ ருயர்மதிவல்லோர்தாமே. (சoஎச)

---

## மகாதிசைபலனறிய.

### வெண்பா.

சீரார்திசாபலனைத்தேர்ந்துபின் சொல்வெண்பாவாய்
பாரோர்முன்னாயேனும் பாடவே - மோராருங்
கையானளித்தமலர்க கையானைக்காய்ந்தமழுக்
கையான்சுதன்முன்னோன் காப்பு. (சoஎரு)

## சூரியமகாதிசைபலன்.

அக்கினியால்பீடை யமைவிருத்திபொன்தேச
மிககபயஞ் சசதுருவால் மேவுபகை - யொக்கவே
கண்ணோய் சிரரோகஙு காதற்பிசா மிருத்தி
யெண்ணுமிரவி திசைக் கே. (௧௦எசு)

## சந்திரமகாதிசைபலன்.

ஆரோக் கியஙகள்சுப மர்த்தலாபம் பிரியஞ்
சீரார் புவிலாபஞ் செல்வருண்டாம் - பாராளப்
பாககியமு மினபம் பரவுவிவா கங்களுடன்
றேககு சசியின் றிசை. (௧௦எஎ)

## செவ்வாய்மகாதிசைபலன்.

சித்தப் பிரமைவருஞ் செங்கோலால் சோரரால்
மெத்த பயமிருத்தி வெண்குட்டம் - மத்தப்
பிரமியமா மீளைப் பெருகிவருஞ் செவ்வாய்ப்
பரவுகதிர் பொசிககில் பார். (௧௦எஅ)

## இராதுமகாதிசைபலன்.

தூற்சேட்டை பீடைநட்டந் துக்கந் துருவிருத்தி
யற்றமனத் தஞ்சோப மகனியால் - செசசைபுட்
காசுவிநாசம் பார்ககில் தலமறப் பாக்கியமாந்
தேசுகரும் பாமபின் றிசை. (௧௦எகூ)

## குருமகாதிசைபலன்.

வித்தைசெயம் புத்திரசம் பத்திமிகு மரசர்
சித்தமகிழ் சன்மானஞ் சேருமே - மெத்தும்
அபிடேக பூடணமு மாதிபத் தியங்கள்
பவுசாங்குரு திசைக்குப் பார். (௧௦அ௦)

## சனிமகாதிசைபலன்.

சோகம்பய மிலங்குந் துக்கமகோ தரமுண்
டாகுமபி மானமகூ கெடுமே - வாகான
மாட்டுக்குஞ் சேதம் வருமுயிர்த்த முண்டாகுந்
தீட்டு சனியின் றிசை. (௧0அக)

## புதமகாதிசைபலன்.

பண்ணியதோர் செட்டும் பயிர்ச்செலவுந் தான்பொசிக்கு
நண்ணும் விரகம்பூமி லாபமாம் - எண்ணுந்
தனலாபம் பங்குகொள்ளத் தானும் வெகுலாபங்
கனமாம் புதன்றிசைக்குள் காண். (௧0அஉ)

## கேதுமகாதிசைபலன்.

பித்தஞ் சயரோகம் பெண்மருந்தி னூலிளைப்பன்
சுத்தந் தரித்திரமுஞ் சூனியமு - மெத்த
வருபாடு மாயுமே வாய்த்த திறல்சேது
உருவாய் மருவுதிசைக் குள். (௧0அ௩)

## சுக்கிரமகாதிசைபலன்.

மன்னர்மறை யோர்தமிழோர் வாஞ்சிப்பர் வாகனமு
முன்னுசத்திர சாமரைபொன் னுண்டாகு - மின்னும்
விவாகஞ் சுபம்பிரிய மெய்நலம்பிணி போஞ்
சுவாகப் புவிலாபச் சுக்கிரன். (௧0அ௪)

## கோசார பலன்.

### வேறு.

ஓதியகோசரந் திசை சக்கரங்க டம்மில் உதித்தவக் கிரகத்தா
னுண்டாகும்பலன்கள், ஆதவன்செவ்வாயிருவர்ககாதியிலேபலன்கள்
அம்புலிக்கும்புதனுககு மனுதினமும்பலனே, பீதகன்சுக்கிரன்பலன்
கண் மத்தியத்திற்றருவர் பெருகுசனிபாம்பிரணடும் பிற்பலனேதரு
வர், சூதுமதக்கரிக்கோட்டைக் கமலமாமுலையைச் சுந்தரப்பொற்
கிரியையவெனற துணைமுலைமாமயிலே. (௧௦௮௫)

---

## கோசார வேதை.

### வேறு.

இரவியைந்தின்மதி யெட்டினேழிற்சேய்
பரவுமூன்றிற்பொன் பார்க்கசவனறினு
விரவுபுந்திநான்கொன்பா னிராகுசுன்
உரவுசென்மமுறிற் கடுங்கேடுறும். (௧௦௮௬)

---

## கோசாரநற்பலஸ்தானம்.

### வேறு.

கதிர்பதினொன்றுமூன்று கருதுபத்தாறினல்லன்
மதியொன்றுமூன்றோராறு மன்னுமேழ்பதுபன்னொன்றும்
பதிபுகழ்சேய்சுன்ராகு பதினொன்றமூன்றாறுகும்
மதிமகற்கிரண்டோராறு மன்னெட்டொன்பதுபன்னொன்றே (௧௦௮௭)

பொன்னவன்பதினொன்றொன்பான பொருந்துமேழைந்திரண்டாம்
துன்னுசுக்கிரற்கொன்றாதி யைந்துமோரெட்டொன்பானும்
பன்னொன்றீராறு தன்னிற் பற்றிடினல்லராவர்
அன்னமேவேதைக்கோள்க ளுறிற்றீயாவரென்னே. (௧௦௮௮)

---

## வேதைஸ்தானம்.

சூரியற்குரைத்தவீட்டிற் கேழினிற்கோணின்றனும்
கூரியமதிக்கைக்கொன்பான குலவுமீராறிரண்டும்
ஏர்பெறுமொருநான்கெட்டுமிராகு சுன்சேய்தமக்குக்
கார்பெறுங்குழலாயைந்தீ ராறொன்பானெனுங்கணக்கும். (௧௦௮௯)

புந்திக்கைந்தொன்பானென்றெட் டீராறிற்புனிதப்பொன்னுக்
கந்தமாமெட்டுப்பத்துமூன்று நான்கீராறும்
சந்தமார்புகருக்கெட்டேழொன்று பத்தொன்பதைந்தும்
உந்துபன்னொன்றுமூன்றோராறு முன்முறைககுவேதை. (௧௦௯௦)

---

## அஷ்டகவர்க்கம்.

ஆதித்தன்றனக்காறெட்டா மம்புலிக்கதன்மேலொன்றும்
வாதிக்குஞ்செவ்வாய்மந்தன் றமக்குமாமுப்பத்தொன்பான்
போதிக்கும்புதற்கைம்பானேடொரு நான்குபொன்னேழெட்டாம்
கோதற்றபுகர்க்கைம்பா னேழிரண்டட்டவர்க்கங்கூறே. (௧௦௯௧)

### வேறு.

கூறிய விரவி தனிலரி சேய்சுன் குலவுமொன் றிரண்டோன்
கோரேழ்-கூடிரு நான்கொன் பான்பது பன்னொன் றுமதிக் கோ
வொரு மூன்றும், ஆறுபத் துடன்பன் னொன்றதாம், புந்திக் கான
மூன் றைந்துட னாறும்-அடுத்திடு மொன்பான் பத்துபன் னொன்றீ
ராறுபொன் னைந்துமோ ராறு, வீறுறு மொன்பா னோடுபன் னொன்
றே விளங்கிய புகரினுக் காறு-மேவுமே ழீரா றுகுட்லக் கினமோ
விரும்புமூன் றும்வரு நான்கும், ஆறுமீ ரைந்தும் பத்துட னொன்றீ
ராறிரண் டாகுமொன் றறைவாய்-அனநடை மயிலின் சாயன்மான்
விழிபு மமைமிகர் தோளுடை யனங்கே. (௧௦௯௨)

மதியினி லிரவி மூன்றுட னாறேழ் வருமெட்டு பத்துபன் னொன்றும்-மதியொன்று மூன்று மாறுட னேழு மன்னுபத் துடன்பதி னொன்றும், திகுச னிரண்டு மூன்றுட னைந்தா றொன்பதீ ரைந்து பன் னொன்றும்-சொல்லுமாற் கொன்று மூன்றுநான் கைந்துந் தொடருமே ழெட்டுமீ ரைந்தும், பதினொன்றும் பொன்னிற் கொன்றிரண் டொருநான் காகுமே ழெட்டுபத் துடனே - பகருபன் னொன்றும் புகர்க்குமூன் றொருநான் கைந்துட னேழுமொன் பானும், அதிகமாம் பதுபன் னொன்றசுன் மூன்று மைந்திரு மூன்றுபன் னொன்றும் - அமருலக் கினமூன்றா றுமீரைந்து மாம்பதி னொன்றென வறைவாய். (க௱கூக)

சேயினி லிரவிமூன் றைந்திரு மூன்று செப்பிய பத்துபன் னொன்றும்-செழுமதி யொருமூன் றாறுபன் னொன்றுஞ் சேர்குச னொன்றிரண் டொருநான், காயவே ழிருநான் கொருபது பன்னொன் றாகு நற் புலவன்மூ வைந்தே-அழகூறு மிருமூன் றொருபதி னொன்று மணிகொள் பொன்மூவிரண் டீரைந், தேயபன் னொன்றீ ராறுசுக் கிரற்கோ வியலிரு மூன்றெட்டுப் பதினொன்-றேசடற் றிடுமீ ராறுமக் தனுக்கொன் றிரண் டேழ்முத லைந்தெண், தூயலக் கினத்திற் கொன்றுமூன் றாறு சொலத்தகுபத்துபன் னொன்றும்-தோடிவர் செவியைத் தாவிமீண் டிகலுந் துணைவிழிப் பணைமுலை மயிலே. ()

புந்தியி லிரவிக் கைந்திரு மூன்றொன் பான்பதி னொன்றுபன் னிரண்டாம்-புகழ்மதி யிரண்டீ ரிரண்டிரு மூன்றெட் டொருபது புகல்பதி னொன்றும், உந்துசேய் மந்தற் கொன்றிரண் டொருநான் கொளிருமே ழாதியைந் தெண்ணும்-உயர்புதற் கொன்றோர் மூன்று நல் லைந்தா றொன்பதீ ராதிநான் கெண்ணும், சந்தமார் பொன்னுக் காறிரு நான்கு சாற்றுபன் னொன்றுபன் னிரண்டே-சருபூசர் தனக் கொன்றாதியைந் தெண்ணுந் தாவெட்டொன் பதுபதி னொன்றும், தந்தலக் கினத்திற் கொன்றிரண் டொருநான் காறிரு நான்குசார்

ய்த்துத்-தகுபதி னென்றுந் தண்மல ருறைபொன் றன்னைநேர் சார்
குழ லாளே. (௧0௯௫)

பொன்னினி விரவிக் கொன்றுதி நான்கெண் புகலுமே ழாதி
யைந் தெண்ணும்-புதுமதிக் கிரண்டே ழைந்தொன்பான் பதினென்
றுய்ப்புகல் செய்தனக் கொன்று, துன்னிரண் டொருநான் கேழிரு
நான்கீ ரைந்துபன் னென்றாபுந் திக்கோ-சொல்லுமொன் றிரண்டு
நான்குநல் லைந்தோ ராறென்ப தாதிமூன் றெண்ணும், நன்னயப்
பொன்னுக் கொன்றுதி நான்கெண் ணவிலுமே ழெட்டொருபஃது-
நாட்டுபன் னென்றும் புகர்க்கிரண் டைந்தா றென்பஃ தாதிமூன்
றெண்ணும், சுன்னினுக் கொருமூன் றைந்திருமூன்றீ ராறுலக்கின
த்தினுக் கொன்று-துய்யரண் டொருநான் கைந்திரு மூன்றே ழொ
ன்பஃ தாதிமூன் றெண்ணும். (௧0௯௬)

புகரினி விரவிக் கெட்டுபன் னென்றீ ராறுதிங் கட்கொன்று
முதலாப் புகலுமைந் தெண்ணு மெட்டுமொன் பான்பன் னென்று
பன் னிரண்டதாஞ் செய்க்குத், தகவுறு மூன்று நான்கிரு மூன்றென்
பான்பதி னென்றுபன் னிரண்டாம் - சார்புதன் மூன்றைந் தாறுநல்
லொன்பான் றங்குபன் னென்றுபொன் னவர்க்கு, இகலறு மைந்
தெட் டொன்பஃ தாதி யேற்றமூன் றெண்ணதாம் புகருக்-கியலு
மொன்றுதி யானவைந் தெண்ணு மெட்டுமுன் னுனநான் கெண்
ணும், நகருமந் தற்கு மூன்றுநான் கைந்து நவிலுமெட் டாதிநான்
கெண்ணும்-நாட்டிலக் கினமொன் றுதியைந் தெண்ணு நாலிரண்
டொன்பான்பன் னென்றே. (௧0௯௭)

சனியினி விரவிக் கொன்றிரண் டொருநான் கேழுட னெட்டு
நற் பத்து-சங்குபன் னென்று மம்புலி மூன்று மும்பதி னென்
றுசெய் தனக்கே, இனியமூன் றைந்தா றீரைந்து பதினென் றீரா
றாகும்புந் திக்கோ - இயலுறு மாறுமெட்டாதியைந்தெண் ணிமய

வர்குருவினுக் கைந்து, நனியுமோ ராறு பதிஞென்றீ ராறுங் கவி
க்குநல் லாறுபன் ஞென்று-நாட்டுமீ ராருங் கனவரை வனச மா
முகை நேர்முலை யாளே, புனைகரு மேனிச் சனியொருமூன்றைந்
தாறுபன ஞெனறெனப் புகல்வர்-போற்றுமலக் கினத்திற்கொன்று
மூன ஞெருநான் காறுபத் துப்பதி ஞென்றே. (௧0௯அ)

## வேறு.

கோணமூன்றிற்பால்சரியாக் குலவின்மூன் றுமெடுத்திடுக
கோணந்தனியிலொன்றிற் குறையிற்குறைந்தபடியே குறையிரண்டும்
கோணந்தனியிலொன்றிற்பாலை கூடாதிருக்கிற்சோதனையக்
கோணந்தனக்குமில்லை யெனக்கூறுவனசமலர்மானே. (௧0௯௯)

மானேயிரண்டுமனை தனிலு மருவிக்கோள்கணின்றாலும்
தேனேகோணின்றிடுமனையிற் பாலுற்ஞென்றினிலதெனினும்
வானுரிரண்டிற்கோளின்றி மன்னுமொன்றிற்பாலுறினும்
கானுசியககடகத்திற் கனமேசோதித்திடுதலில்லை. (௧௧00)

இல்லாதிரண்டுராசியிற்கோ ளியலும்பால்கள்சரியுறினும்
வல்லாக்கோளுற்றிடுமனைபாழாகி மற்ஞென்றுற்றிடினும்
வில்லாக்கோளுற்றிடும்பாற்கு மேவுமெதிரிற்சமன்குறையேல்
அல்லார்குழலாயப்பாலை யகற்றுமென்பாறறிவோரே. (௧௧0௧)

ஓராய்கோளோர்மனையுற மற்ஞென்றிலதிகப்பாலுறினும்
சேரார்கோளின்றிப்பால்கள் சேர்ந்தொன்றிற்கொன்றதிகமதேல்
வாரார்கொங்கைமதிவதன மானேர்விழிநன்மடமாதே
ஏரார்பாலைநேராகவிருக்கச் செய்வாயெனவுரைத்தார். (௧௧0௨)

வேறு.

உரைத்தகோள்களூறுஞ் சமுதாயமாய்
விரைத்தவார்குழ லவ்வவ்விராசியில்
நிரைத்தபிந்தை யொன்றுசெறித்திட்டதே
திரைத்தநற்சரு வாட்டகஞ்சேருமே. (கக0௩)

வேறு.

இலக்கினமாதிநந்நான்கு வீட்டிலிருந்திடுபரல்களைக்கூட்டி [கள
உலப்பறுமூன்றுதொகையினின்முறையே யுயாபரலைகொடுபலன்
நலப்பறுவயதைமூன்றிகூறிட்டே நயம்பெறமொழிந்திடவேணடும்
சிலைப்புருவத்தண்மதிநுதற்கருங்கட்செய்யவாய்ப்பைந்தொடியாளே.

வேறு.

இரவிக்கொன்பான்மதிக்கும் புந்திக்குமீரிரண்டாம்
குருவினுக்கைந்துசேய்க்குமூன்று சுக்கிரனுக்கோரேழ்
வருசனிக்கிருநான்காகு மிராசியின்சமுதாயத்தை
விரவுசோததியததாற்றுக்கி மேவுமூவொன்பாற்கிந்தே. (கக0ரு)

வருபலன்வளர்பிறைக்கோ மகிழசுபதிமுன்னாகத்
திருவறுதேய்பிறைக்கே சேரவிட்டம்முன்னாக
விரவுடனெண்ணிகண்டநாள் குருமேவுங்காலம்
பரவுநற்பலன்சுன்கூடிற் பகர்காரகாக்குக்கண்டம். (கக0சா)

தான்சமுதாயமுப்பான் மேலுறிற்பூர்ணஞ்சாற்றும்
ஆனவையைந்தினமீதி லடுத்திடின்மத்தியமந்தான்
ஈனமாமிதன்கீழற்பமாம் பலம்வியமீரைந்தில்
வான்பரல்குறைந்திலாபம் வருஞ்சன்மமுயரில்யோகம். (கக0எ)

பதிமூன்றில்வியமிருந்தாற் பகர்ந்திடுசெலவுமேலாம்
அதிபெறுபத்தின்மேலாம் வியமெனிற்சகடந்தோற்றம்
வதியுமாறெட்டீராறின் மன்பரற்றொகைக்குமேலாய்ப்
பதிபுகழிரண்டொன்பான் பன்றொன்றுறிற்பகர்வர்யோகம்.　()

## இராசிகுணகாரம்.

இடபஞ்சிங்கமீரைந்தாமியன் மேடங்கோவீரேழாம்
கடகமோர்நான்கும் மீனக்கருதுமீராறேயாகும்
மடஞ்சேர்கன்னிசுருவைந்தா மன்னுந்தனுவொன்பானாகும்
குடம்பன்னொன்றுமிதுனந்தே ளெட்டாம்ராசிகுணகாரம்.　(௧௧௦௯)

## கிரககுணகாரம்.

### வேறு.

நற்றவக்குருபத்துசேய்
உற்றவெட்டுநற்சுக்கிரன்
முற்றவேழுமோரைந்துமே
மற்றையோர்குணகாரகம்.　(௧௧௧0)

## மாதங்கலப்நம்.

குணகாரத்தொகையிரண்டை யொன்றாக்கூட்டிக்குலமுந்நூற்றிருபானுன் கதனிற் றாக்கும், கணமதனை முந்நூற்றே டறுபானிங்கில் கழித்துவருஞ் சேடத்தை மூவொன் பானில், உணக்கமற வேகழித்த பலனுண் டாகும் உயர்சேடந் தனையீரா றதனிற் றாக்கி, இணக்கமுடன் முன்போல வியற்றிக் கொண்ட வீவுமதி சேடமுப் பானையத் தாக்கே.　(௧௧௧௧)

தாக்குதொகை தனைமுன்போ லிந்தபேறு தானுளாஞ் சேட
த்தை யறுபான்றன்னில், தாக்கிவரு பேறுகன்ன லாமிவ் வாறே
தான்காணு வாய்மற்றை விநாடி யாகி, போக்கருமவ் வவர்வருட மா
தமாதி புறம்பாக வைத்ததனை யாணைஞ் செய்யும், தாக்கணங்கே
வகையதனை விரித்துச சொல்வர் சாதகநூ லுணர்ந்தபெரி யோர்க
டாமே. (௧௧௧௨)

## வேறு.

ஓர்மனை தனிலிரண்டு கோள்கணின் றிடினுரீசம்
ஏராறுமத்தமானம் பகையினுங்கடகத்தேனும்
ஆரமதிகூடினுலுமலதுநேர் நோக்கினுலும்
தார்குழலாளேயக் கோளாயுளிற்பாதிதள்ளே. (௧௧௧௩)

தன்னுநண்டதிற்சுபக்கோடங்கிடின் மூன்றிலொன்று
தளனுநட்பதனினின்றகோளுக்கு நான்கிலொன்று
தன்னுபாபக்கோணீசம் பகையுறிலெட்டிலொன்று
தன்னுபாபக்கோணட்புத் தானுறினுன்கிலொன்றே. (௧௧௧௪)

ஒன்றியகோள்கணின்ற வோரைக்குவியத்திற்பாவர்
நின்றிடிலவர் கொடுத்தவாயுள்களெல்லாநீக்கும்
துன்றுபன்னென்றிற்பாதி சொல்பத்தினுன்கிலொன்று
நன்றுபாக்கியமெட்டொன்று நவிலெட்டிற்பதினுறுமே. (௧௧௧௫)

ஆம்வகைசுபக்கோளாயின் பாபருக்கறைந்தவெண்ணில்
தாமதிற்பாதிநீங்குஞ் சார்பாபராட்சியுச்சம்
ஏமுறிலரணமில்லைவிரும்பு கோளாட்சியுச்சம்
வாமமார்குழலாய்பத்திடுன்றுமேற் கூட்டுவாயே. (௧௧௧௬)

## காலசக்கிரம்.

### வெண்பா.

சேய்க்கெழுபொன்பந்நச் சேரிரவிக்கைந்தாகும்
வாய்த்தபுகர்க்கிரெட்டா மாலுக்கோ - ஏய்த்தொன்பான்
சந்திரற்குழுவேழாஞ் சாற்றுஞ்சனிக்கொருநான்
கிந்தமுறை ராசிகளுக்கெண். (ககள)

கேள்சகமொன் றலையாழ் கேடின்மகமூன்மூன் றும்
நீள்சுளகுதேள்கேட்டைநேரோணம் - வாளவிட்டம்
செக்குமிடவோட்டாகுஞ் சோரப்பதினைந்தும்
இக்குமொழியாய் வலவோட்டே. (ககஅ)

ஏயபரியார * லெரியேதமறுசோதியா
வாயவத்தமூலமுத்திராடமுடன் - தூயகடை
நான்புரட்டையீரைந்தினை முதற்காற்காடாதி
நீள்தனுவீறாக வருநேர். (கககூ)

நேரிரண்டாங்காலுக்கு நீண்மகரங்கும்பஞ்சேல்
சீரறுதேள்கோலரிவைநேர்கடகம் - வார்சியம்
தண்டாகுமூன்றாங்கா றாணிடபமேடமீன்
கொண்டகும்பமான் றனுசுகூறு. (கக௨0)

கூறுமேடமிடபங் கோலமிதுனமாம்
வீறுநாற்காலுக்குமேலவன் - நாறுமலர்க்
கோதாய்முதலாகக்கொண் மீனராசிவரை
ஏதமறு புத்திக்கினம். (கக௨க)

இனமார்பரணியெழிற் பூசஞ்சித்திரையோ
டனமேநீர்நாளுத்திரட்டாதி - எனுமைந்தின்

---

* எரி - புநர்பூசம்.

முற்காறேள்கோலரிவை மூன்றுகடகஞ்சியம்
மிக்கதண்டே ராமீனம். (௧௧௨௨)

மீயிரண்டோகும்பமான் வின்மேடந்தொட்டரிவை
ஆயாறுமூன்றிற்கோல்தொட்டாறும் - ஏயதேள்
கோலரிவையாகுங் குளிர்சியர்தண்டுமுதல்
வலவின்மட்டா மிடமாயீறு. (௧௧௨௩)

ஈறு * மூரோணிமகமேர் சுளகோணம்பிவற்றின்
வீறுமுற்காற்குவில்லாதிதண்டும் - கூறுசிங்கம்
நண்டிரண்டாங்கால்கன்னி நற்கோறேண்மீன்கும்பம்
அண்டுசுறுவிற்றேள் கோலாம். (௧௪௨௪)

ஆமூன்றுங்காலுக் கரிவையரிநண்டுதண்டும்
வாமிடபமாடுதனுமான்குடமாம் - தேமொழிகேள்
மீனொடெருதுமினஞ் சிங்கநண்டரிவை
தானுங்கோறேள் கடைக்கால்சாற்று. (௧௧௨௫)

சாற்றுமகசிரம்யாழ் சார்பூரமுத்திரமும்
போற்றுமனுடங்கேட்டை o போரவிட்டம் - ஏற்றுமுதற்
காலுக்கிடமாக் கயலாதிஞண்டுவரை
கோலக்குவி முலையாய்கூறு. (௧௧௨௬)

கூறுதண்டுகுண்டைமறி கூன்சிலைதொட்டேறளவும்
வீறுமிருகாற்காமேலாங்காற்கு - மீறுதண்டு
அரிஞண்டுபெண்கோ றேளாமீன்குடமாம்
சுரிகுழலா யாமெனவேசொல். (௧௧௨௭)

---

* உரோணி - உரோகணி.

o போர் - சதயம்.

சொல்லுநாலாங்கார்க்குத் தூயசனுவாதியாய்
வல்லமேடம்வரையொன்பான்மனையும் - நல்லாய்
இடவோட்டாகமொமவ ரீராறுகாலீகரும்
விடமாராதேளாதிவின் மட்டே. (ககஉஅ)

மட்டாருஞ்சக்கரத்தின் வானுண்டிற்கும்புத்தி
தொட்டாருமாண்டிற்குந் தோகாயகேள - நட்டார்
தொகைத்தமமைமாறிச்சொலுந் திசையாண்டுகதி
மிகைவரும்பமேற புத்திமேல். (ககஉக)

மேடனுந்தனுமீனம் விரசிகஞ்சிஙசக்கதியாம்
நாடரிவைநண்டுசிஙகநற்றண்டு - கூடும்
தவளக்கதிவலநேர்தான் சாப்பவோட்டம்
திவளிடமேமர்க கடமாசசெப்பு. (ககங0)

செப்புவலவோட்டுக் தசசேர்தொட்டலக்கினமெய்
ஒப்பரியச்வன்விடுமோனையே - தப்புமிட
ஓட்டிற்குமாறு புரைவயிற்றிலேசுபர்கள
கூட்டமுறினற்பலனேகூறு. (ககஙக)

ஆகச்செய்யுள் பாயிரமுட்பட - ககஙசு.

---

# சாதகாலங்காரம்

முற்றிற்று.

---

சிவமயம்.

# சாதகாலங்கார

## பொருளடக்க அகராதி.

முற்றிற்று.



